***"Before the Rooster Crows"***

## *A prologue to "Simon Peter – Tears"*

*Before the dawn, beneath moon's sigh,*
*A heart once bold begins to cry.*
*Faith once sworn with fire and might,*
*Now trembles in the shadow's light.*

*A Master calls, a soul retreats,*
*In silence loud, denial repeats.*
*The rooster waits, the moment near,*
*Three echoes born of doubt and fear.*

*The hands once raised in loyal vow,*
*Now falter, burdened, breaking down.*
*Love turns pale, and courage wanes,*
*In eyes of Grace, a sea of pains.*

*But oh! What sorrow births the flame,*
*Of humbled heart and holy name.*
*The Guru weeps not wrath but balm,*
*And turns the storm to healing calm.*

*This is the tale, not sharp with scorn,*
*But how the fragile heart is torn—*
*Then slowly stitched with threads of light,*
*To rise anew from shame's long night.*

*Come walk this path through tear-stained verse,*
*Where glory flows through love's reverse.*
*The fall, the cry, the gaze, the plea—*
*To truth, to Grace, to mystery.*

---

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-19-6-2025

# சீமோன் பேதுரு-கண்ணீர்

---

## விழிப்புணர்வு





இரவு தூங்கும் நேரம்-பௌர்ணமி
நிலவு தூங்கிடாத காலம்-விழிப்போடு
தந்தையை வேண்டிய பிள்ளை மனம்
தவிப்போடு இரத்த வியர்வை சிந்திய தினம்

உயிரச்சத்தின் உச்சத்தில்-தன்னைக் கையளித்து
வெற்றுப் புல்லாங்குழலாய் மாறிட அச்சம் மறைந்து
ஆனந்த விழிப்புணர்வு மலர்ந்து உச்சத்தில்
மனுமகன் இறை மகனான அருட் கோலம்

என் சித்தமன்று தந்தையே
உம் சித்தம் நிறைவேறுக
தந்தையும் மகனும் ஒன்றான
அத்வைதம், பேரானந்தம்

வெற்றுப் புல்லாங்குழலில்
இறைவனின் வேனுகானம்
தந்தை மகனை ஆட்கொண்ட
அதிசய ராகம், அபூர்வ ராகம்



அச்சத்தின் உச்சத்தில் மனுமகனின்
பரிபூரண சரணாகதி- தந்தையும்
மகனும் இணைந்திட யோகமே வழி
தூக்க மயக்கத்தில் சீடர் தவறவிட்ட
வாழுங்கலையான அற்புத நெறி

ஆணவத்தில் நிலைத்த சீடன் மனம்
மனங்கழித்து,அன்புத் தந்தையிடம் சரணடைந்த
குரு தத்துவம், பரிபூரண சரணாகதியே வழி
சற்குரு காட்டிய வாழுங்கலையான நெறி

உன் சிலுவையைச் சுமந்து
என் பின்னே வாருங்கள்-ஆணவம்
கழித்து விழிப்புணாவில் நிலைக்க
குரு விடுத்த அழைப்பு

தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம்
எளிய மனத்தவருக்கே இறையரசு
மனம் கழிந்தால் ஆசை அழியும்
ஞானம் மலரும்-பிரக்ஞானம் பிரம்மம்
அனுபூதியாகும்

## குருவின் கைது

கைகளைக் கட்டிப் பெருங் கள்வனைப்போல்,
காரிருளில் இயேசுவைக் கைது செய்தார்,
படை வீரர் காவலாய்ச் சூழ்ந்து வர-குருவை
கோயில் காவலர் தம்மோடு கூட்டிச் சென்றார்

உம்மோடு மரிக்கவும் தயார்-ஆணவமாய்
சீடனின் வீறாப்பு-குருவே தன்னைக் மனமுவந்து
கையளித்த அற்புத நிகழ்வு, அன்பைப்
புறந்தள்ளி மால்குஸின் காதறுத்த சீரழிவு
ஆணவமோ சீடனை ஆட்டிப் படைக்கும் உணர்வு

## சீடரின் துயரம்





கணை தைத்த கலைமான்போல் நெஞ்சம் வருந்த
தாயைப் பிரிந்த கன்றாய் மனம் வாடச்-சீடர்
கண்களில் கசியும் ஈரம் தீராத சோகம் சொல்ல,
குரு இல்லாத வாழ்வு கதிர் இல்லாத வானானது

திரள் நரியிடையே அகப்பட்ட கலைமான்போல்
நெஞ்சம் வாட-கரிவாய்ப் பட்ட கரும்புபோல்
மனம் நோக-கத்தாத செம்மறிபோல் படையினர்
நடுவே அவர் தோற்றம் சோக அலைமோதும்
கடலாய் சீடர் நெஞ்சத்தின் உருமாற்றம்

தொலை தூரத்தில் யோவானும், பேதுருவும்
யாருமறியாமல் கூட்டத்தைப் பின் தொடர
யாதுமானவனோ-பலியாகும் செம்மறிபோல்
முள்ளான பாதையில் முன் நடந்தார்

குருவோடு ஒன்றாய் கூடி நடந்தவர்- இன்று
குருவைப் பரிந்து தொலை தூரத்தில்
மறைந்து பின் தொடர்ந்தார்-குருவின் இருப்போ
சத்சங்கம்; பிரிந்திட மனமோ சுரம் தப்பிய ராகம்

## விசாரணை

முன்னாள் தலைமைக் குரு
அன்னாவின் வீட்டில் கண் துடைப்பான
அவசர விசாரணை-உண்மை, கருணை,
திருச்சங்கத்தில் மரத்துப்போன சுரணை

நம் இனம் முழுவதும் அழிவதை விட-நம்
இனத்திற்காய் ஒருவன் இறத்தல் சாலச்சிறந்தது
தத்துவம் மொழிந்தவனோ-அன்னாவின்
மருமகன் கயபா-இந்நாள் தலைக்குரு

## மறுதலிப்பு, தவிப்பு, ஆணவத்தில் நிலைப்பு

கூட்டத்தோடு கூட்டமாய் உள்ளே நுழைந்த பேதுரு
உள்முற்றத்தில் குளிர் காய்ந்தவர்களுடன் கூடிக்
குளிர்காய-இதயத்திலோ அச்சத்தின் காயாத ஈரம்
மனதில் திக்குத் தெரியாத காட்டில் அலையும் பாவம்

இவனும் அவனோடு இருந்தவன்தான்
கண்ட பணிப்பெண் கருத்தாய் கூற-
சொல்வது என்னவென்று புரியவில்லை மறுதலிக்க,
கொக்கரக்கோ!, சிறகடித்துக் கூவிய சேவல்



சேவல் தஞ்சிறகாம் கையால் வயிற்றிலடித்து
சீடனை எச்சரித்தது, நன்றோ?
குருவை மறுதலிப்பது முறையோ?
நன்றி கடுகளவும் நெஞ்சில் இல்லையோ?



உறுத்தும் மனதோடு வெளிமுற்றம் சென்றவர்
மனதிலே அச்சம்-கண்ட பணிப்பெண்
கருத்தாய் மீண்டும் காட்டிக் கொடுத்திட
கோழை மனதில் உச்சம் தொட்ட உயிரச்சம்

இல்லை, நான் அவனில்லை மறுதலிக்க-நீ
கலிலேயன் எனக் காட்டும் உன் பேச்சு
கூட்டம் குற்றம் சாட்ட மறுத்து, ஆணையிட்டு
அவனை அறியேன் எனச் சபித்த ஏச்சுப் பேச்சு

அறியேன் அந்த மனிதனை-அவன் ஒழிக
அச்சத்தில் ஆணையிட்டு மறுக்கச், சபிக்க,
மறுதலிக்க-உச்சத்தில் கொக்கரக்கோ!
இரண்டாம் முறை கூவிய சேவல்

இயேசு திரும்பிப் பார்த்திட-கணப்பொழுது
கலந்த விழிகள், கலக்கமுடன் நின்ற விழிகளை
கருணையுடன் நோக்கி -கலங்காதே,
திருவிழிகள் மொழிந்த ஆறுதல் மொழிகள்

## சரணாகதி

உயிரச்சத்தின் உச்சத்தில் ஆணவம் கழிய
குருவிடம் சரணடையும் மனம்
ஆணவம் ஆகுதியாக சரணாகதி வேள்வியாக
விழிப்புணர்வு வரமாகும் காலம் தவறிப்போனது

சற்குருவான குருவோ விழிப்புணர்வு
சத்சங்கமாய் அவர்தம் இருப்பு
சரணாகதியான மனதில் சுடராய்
பற்றிக் கொள்ளும் குருவின் விழிப்புணர்வு

## சேவலின் கேவல்

சேவல் இருமுறை கூவுமுன்-சீமோனே
என்னை நீ மும்முறை மறுதலிப்பாய் நிஜமாக
எச்சசரித்தும் தவறிவிட்டாய், வருத்தத்துடன்
கேவிக் கூவிச் சான்று பகிர்ந்த சேவல்




செஞ்சேவல் கையாம் சிறகை வயிற்றிலடித்து
கதறிப் பதறி இரண்டாம் முறை கூவியது
அஞ்சியவருக்கு சதா மரணம்-அஞ்சாத
நெஞ்சத்தவருக்கு ஒரு முறைதான் மரணம்

கூவிய சேவலின் குரலில் சோகம்
சாமாவும், சஹானாவும் கலந்த கழிவிரக்கம்
விடியல் கண்டு பூபாளம் பாடும் சேவல்-குருவின்
அஸ்தமனம் கண்டு கேவிட முகாரியின் ஆலாபனம்

இதுவரை கூவாத இராகம்-இன்று
கூவிய சேவல் மனதில் ஆறாத் துயரம்
விடியல் காணக் கூவும் கானம் சீடனின்
தூக்க நிலை கண்டு கேவிய பாவம்

எச்சரிக்க சேவலும் கூவி எழுப்பிய மனச்சாட்சி
உயிரச்சத்தில் செவிடன் காதல் ஊதிய சங்கானது
சேவலும் கேவி ஊமையானது, சீடனும் அழுது
சோகத்தை கண்ணீரில் கரைக்கும் துயரானது

வார்த்தையை அறியேன் மறுதலித்தவனோ சீடன்
வார்த்தையை அறிந்து பணிந்த பறவையோ
விடியல் கண்டு கூவும் சேவல்-விழித்திடு சீமோன்
என்றோ முதல் முறை கூவி எச்சரித்த அகவல்

உள்ளம் விழிக்க கூவியும் விடியாத
சீடன் மனதிலோ இருளாய்த் திகில்
சேவல் இருமுறை கூவிட நிறைவேறிய
வார்த்தையோ ஞாலத்தை ஒளிர்விக்கும் கதிர்

விடியல் சொல்ல கூவும் சேவல்
விழிப்புணர்வே விடியல் காலம்
விழித்திடு, கூவியது, சீடன் மனமோ
தூக்கத்தில் நிலைத்தது

## சற்குரு

முக்காலம் அறிந்த சற்குருவாய் மனுமகன்
தவத்தில் நிலைத்து, விழிப்புணர்வை வரமாக்க
பேதுறுவிற்கு விடுத்த முன் எச்சரிக்கை, அச்சத்தில்,
நிலைத்து ஆணவத்தால் சீரழிந்த சீடன் நிலைமை



விதி என்று ஏதுமில்லை
மனித சுதந்திரமோ மாண்பு
சரணாகதியான மனிதருக்கே
இறையோகம் சாத்தியம்

## சீடனின் துயர்

யாரிடம் செல்வோம் இறைவா-வாழ்வு தரும்
வார்த்தையெல்லாம் உம்மிடமே,
அன்று போற்றிய நா- இன்று தூற்றி மௌனிக்க,
அன்புக் குருவோ கண் மறைந்த ஒளி
காரிருளான வாழ்வில் செல்ல இனி ஏது வழி?

அஞ்சி மறுதலிக்கும் அன்புச் சீடன்
ஆறாத் துயர் கண்டு நெஞ்சு பொறுக்காமல்
அடிவயிற்றில் சிறகால் அடித்து கெஞ்சிக் கூவிய
சேவலின் மொழியில் மறுதலிக்காதே சீடா
மாண்பிழக்காதே மனிதா என்ற பெருந்துயர்

அச்சத்தில் மலரான உள்ளம் சருகானது
உச்சத்தில் மனம் கோழையானது
கணம் சந்தித்த குருவின் கண்களில் கருணை
நெஞ்சைத் தேற்றிட சஞ்சீவினியான தொடுகை

ஆடை தொட்டு குணமான நங்கை
பாடையில் போனவனை எழுப்பிய வார்த்தை
கொதித்து குழம்பிய காற்றும் கடலும் கண்ட அமைதி
பரிவோடு விழிகள் தொட நெஞ்சில் நிலவிய சாந்தி

விடியல் கண்டு கூவிக் களிக்கும் சேவல்
விழிக்க கூவியும் விழிக்காத சீடன் மனது
அழுது புலம்பியும் ஆறாத மனது
சேவல் கூவும்போதெல்லாம் கேவும் மனது



வாழும் இறைவனின் திருமகன் நீர்
மெஸாயா அன்னு இயம்பிய வாய்
இன்று அறியேன் அவனை மறுதலித்து
சபித்திட மனம் கந்தது, வாய் புளித்தது

உயிரச்சம் அறிவைக் கொல்ல-உயிரில் உயிராய்க்
கலந்த உறவை அறியேன் என மனம் கொல்ல-
தக்கன பிழைத்தலான வாழ்வில்
தப்பிப் பிழைத்திட மறுதலிப்பே உபாயமானது

அன்புறவு அச்சத்தில் மறுதலித்தது
பூபாளமே தாளம் தப்பி அபசுரமானது
சந்தர்பவாதம், சகாயமான வேதமானது



மறுதலித்த வார்த்தையால் நிலை குலைய
மனம் சிதைய, கொண்ட நட்பழிய மணமிழந்த
சீடத்துவத்தில் பொய்மையின் துர்க்கந்தம்
குருதத்துவத்திலோ கருணையின் மாறாத சுகந்தம்

ஆழமற்ற கடலில் மீன் பிடித்த ஏழையை
சீடனாய் அழைத்த ஞானம்-கரியை
வைரமாய் மாற்றிய குருவின் இரசவாதம்
வைரமே கரியாய் மாறிய பரிதாபம்



விழிப்பின்றித் தூங்கிய சீடன்
விழிப்புணர்வைத் தவறவிட்டு -குருவை
அறியேன் என மறுதலித்துச்
சபித்து, ஆணையிட்ட அண்ணகன்

அழுது புலம்பியும் ஆறாது என் காயம்
தொழுது புலம்பியும் தீராது என் துயரம்
ஓயாத அலைகளாய் மனதிலே சோகம்
வாழ்நாள் முழுதும் வருத்தும் என் பாவம்

எரி தணலில் விழுந்த பூந்தளிர்போல்
இதயம் நோக, அன்பு மனம் வேக
அச்சத்தில் மறுதலித்த கோழை-சோகத்தின்
உச்சத்தில் அழுதார், புலம்பினார்



நிலை குலைந்த உள்ளமும் சிவந்த விழிகளும்
கலைந்த முடியும், ஆறாத் துயர் சொல்ல,
ஆணையிட்டு மறுத்துச் சபித்த மனதில் அழுதும்
கரையாத பாவம்-தொழுது புலம்பியும் தீராத சோகம்

தனித்திருத்து, விழித்திருந்து, கண்ணீர்த் தவமிருந்து
குருவின் அன்பிற்காய்ப் பசித்திருந்து உள்ளம் குமுற,
உயிர் சோர ஆறாத் துயரோடு செய் பிழை எண்ணிப்
புலம்பிய இதயம் மன்னிப்பை இரஞ்சிய இதயம்



அழுது புலம்பிட-ஓயாது அழுத முகத்தில்
கண்ணீர் கறையாய் நிலைத்திட
அழுதும் கரையாத இமயச்சோகத்தை இறக்கிட
சுமை தாங்கியின்றிச் சோர்ந்த அன்பு மனம்

எண்ணிப் புலம்பிட இதயத்தில் கோடித் துன்பம்
காயமான மனதில் கனக்கும் துயரோ இமயப் பாரம்
வண்ணமும், வாசமுமிழந்த மலராய் வாடும் மனது
தேன்மலரைத் தேடும் தும்பியாய் அலையும் பொழுது

தன்னை அறிந்திட-ஆணவம் மறைந்திட
ஐயன் பெருமை மனதை நிறைத்திட
ஆட்கொண்டு என்னை அழைத்த குருவே
ஆட்கொள்ளாயோ பாவி என்னைப் புலம்பினார்



கடல் மீது நடக்கத் தூண்டிய ஆணவம்
கடலில் மூழ்கிடக் கரைந்தது
காதறுத்து காட்டிய வீரம்-மறுதலித்துச்
சபித்திட, நாணி ஒடுங்கியது

நீயில்லாத உலகில் வாழ்வேது-பெருமானே
நிலை வாழ்வு தரும் வார்த்தை நீதானே
சாரமற்ற உப்பான என் வாழ்வு-நெய்யின்றி
புகையும் தீபம்போல் என் தாழ்வு

எண்ணெய்யில்லை, சுடரில்லை-இன்றோ
எல்லாமானவனே உன்னோடு நானில்லை
என்ஆண்டவரே என் தேவனே!
என் பாவம் பொறுத்தருளும்

கல்லான பாறை மணலாய் உதிர்ந்தது
கற்பூர தீபம் அணைந்து கரும்புகையானது
ஆழமற்ற கடலில் வலை வீசிய மீனவன்-குருவை
அச்சத்தில் மறுதலித்தவனோ முதன்மைச் சீடன்

மாற்றான் காதறுத்தல் ஆணவ மனதிற்கு எளிது
தன் நாவை அடக்குதல் அரிது
உண்மைக்குச் சான்று பகிரக் கிடைத்த
தருணங்கள் மூன்று: உயரச்சத்தில் மறுதலித்'துச்
சபித்ததோ சீடத்துவத்திற்கு இழிது

செய் பிழை அறிந்தவர் மனம் குமுறி அழுதார்
எழுபது தடவை ஏழு முறை மன்னிப்பாய்
என்ற கருணை என்னை மன்னிப்பார் நம்பிக்கை
துளிர்க்க புண்பட்ட நெஞ்சிலே அமைதி,
பண்பட்ட மனதிலே நிம்மதி



### மனித வாழ்வு ஒரு இரகசியம்

மேடம், இடபம், மிதுனம், கடகம்,
சிம்மம், கன்னி, துலாம், விருச்சிகம்,
தனுசு, மகரம், கும்பம், மீனம் என
பன்னிரு இராசிகள்



பிராமண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரன்
நான்கு வர்ணங்கள் உள்ளுணர்வு நிலைகளாக,
சத்துவம் (அமைதி), ரஜஸ் (செயல் நிலை),
தமஸ்( மந்த நிலை)-எனும் முக்குணங்களாக
ஆட்டுவித்தால் ஆடும் பொம்மையாய் மனித வாழ்க்கை

பிரம்மத்தை அறிந்தவன் பிராமணனாக
தன்னை ஆண்டு எளியோரைக் காப்பவன்
க்ஷத்திரியனாக-தன்னுள் மெய்செல்வத்தைக்
கண்டவன் வைசியனாக பணி வாழ்வே சூத்திர
நிலையாக உயர்வு தாழ்வில்லாக் குல ஒழுக்கம்

பன்னிரு இராசி மனிதர்களாய்
யூத கோத்திரங்களும்-இயேசுவின்
பன்னிரு சீடர்களும்

கடுகளவுக் கல்வியும், கையளவு
கடலோடி அனுபவமும் வறுமைக் கடல் நீந்திக்
கரைசேரப் போராடும் வாழ்வும்
ஏழை மீனவன் சீமோனின் அழைப்பானது

துன்ப துயரங்களும், வறுமையும் நிறைந்த வாழ்வில்
கண்ட பேரமைதி இயேசு பெருமான் சந்நிதியாக
வா என் பின்னே-உன்னை மனிதர்களைப் பிடிப்பவன்
ஆக்குவேன் குருவின் பேரழைப்பானது

அமைதி கண்ட மனம் -ஆனந்தமாய்
அனந்தன் அழைப்பை ஏற்றது இருமை கடந்த
குழந்தை மனம் உறவையும், உடமையையும்
துறந்து இருப்பாய் இருப்பவரை
பெருநிதியாய் கண்டு பின் சென்றது

கூழாங்கல்லும் வைரமாக
குருவின் இரஸவாதம்
பேதுருவாய் குரு நாமம்
சூட்டிடப் பெருமிதம்.

யாரிடம் செல்வோம்-இறைவா
வாழ்வு தரும் வார்த்தை எல்லாம் உம்மிடமே
இறைமகன் நீரே! விழிப்புணர்வு வரமாக
சத்தியம் மொழிந்த சீடன்



சத்தியனிடம் மாறா நேசம் கொண்ட சிநேகன்
கடல் மீது நடக்க ஆவல் கொண்ட விசுவாசி
பொங்கும் கடலும், புயலும் கண்டு
அஞ்சி மூழ்கிய அற்ப விசுவாசி

அன்போடு கடிந்து, கரம்பிடித்து காத்த குரு,
பாதம் கழுவிப் பணி வாழ்வைப் புகட்ட-
முன் மறுத்து பின் பணிந்தவரை
அன்பால் அணைத்த திரு

மரணம் மட்டும் உம்மைப் பின் செல்வேன்
வீறாப்பாய் மொழிந்த சீடன்-மால்குஸின்
காதறுத்து குரு பக்தியைக் காட்டிய வீரன்
இருமுறை சேவல் கூவுமுன்-குருவை
மும்முறை மறுதலித்த கோழை

இருமை நிறைந்த வாழ்வில்
பிராமண, க்ஷத்திரிய, வைசியக் கலப்பான
சூத்திரத் தொண்டன்-விழிப்புணர்வு
தூய ஆவியினால வரமாக
வாழ்வை அர்ப்பணித்த முதன்மைச் சீடன்

விழிப்புணர்வும், அவவிசுவாசமும், மறுதலிப்பும்,
மன்னிப்பின் கதறலும், மானுட இயல்பை காட்டிட-
உணர்வுகளின் இன்னிசையாய் ஏற்றமும் இறக்கமுமான
எளிய மனிதனாய் சீமோன் பேதுறுவின் வாழ்வு

தலை கீழான சிலுவை மரணத்தை
தனக்காய்த் தெரிந்த பேதுரு,
குருவிற்கு ஈடில்லை என்றே
குரு பக்தியை காட்டிய அன்புறவு



பாவி புனிதனான அகமாற்றம்
குருவோ இறைமகனான
மெய்த்தோற்றம்-நொருங்கிய இதயம்
கண்டறிந்த சத்தியமோ அனுபூதி

### *விழிப்புணர்வு குரு அருளும் வரம்*

உன்னதத்தின் உயர்நிலையில்
கிறிஸ்து உள்ளுணர்வு
காட்டிக்கொடுக்கவோ, மறுதலிக்கவோ
முடியாத வானுயர்ந்த பேருணர்வு



தன் சுயத்தை மறுத்து
காட்டிக் கொடுத்தவர்-தன்னையே
காட்டிக் கொடுத்தார்-மறுதலித்தவர்
தன்னையே மறுதலித்தார்

எரியும் தீபத்திலிருந்து எரியாத் தீபத்திற்கு
ஒளி தாவியும் எண்ணெய்யில்லாத் தீபத்தை
ஏற்ற முடியவில்லை, விழிப்புணர்வான குரு அளித்த
வரத்தை ஏற்க சீடன் தயாராயில்லை
காலம் கனியவில்லை, ஆணவம் கழியவில்லை

உம்மோடு மரிக்கவும் தயார்
ஆவேசமாய் உரைத்த வார்த்தையில்
மறையாத ஆணவம், ஆணவம் அழித்திட
சற்குரு ஆடிய நாடகமாய் சரணாகதி

சீடனின் ஆணவத்தை அழிப்பதே
குருவின் லீலை- ஆணவமழிந்த சீடன்
குருவாய் மாறுவதோ வாழுங் கலை
மகா கலைஞனான குருவோ வாழுங்கலை

அச்சத்திலும் மாறாத ஆணவம்
தன்னை அறியாத சுபாவமோ ஈனம்
தவமான சந்தர்ப்பம் தவறிப்போனது
வரமோ எட்டாக் கனியானது

மனமழிந்திடக் கிட்டும் விழிப்புணர்வு
உயரச்சமோ மனமழிந்திட உன்னத தந்திரம்
குருவின் கருணையோ சீடன்
புரியாத திருவிளையாடலான மந்திரம்

மும்முறை மறுதலித்ததோ முழுமையான மறுதலிப்பு,
உயிரச்சத்தில் மனமோ தூக்கத்தில் நிலைப்பு,
மறுதலித்தபின் மனதிலே சலிப்பு, விழிப்புணர்வோ
கானல் நீராய், எட்டாத நிலவாய் மாறிய நிகழ்வு



ஒளியில் எத்தனை நிறங்கள்
ஏழு சுரங்களில் எத்தனை இராகங்கள்
மனிதரில் எத்தனை இரகங்கள்
தேவன், மனிதன், அசுரனாய் குணங்கள்

உள்ளுணர்வின் முடியில் இறைவன்
அடியில் மனிதன் உயர்ந்தால் தேவன்
தாழ்ந்தால் அதளபாதாளத்தில்
அவனே அசுரன்

*எல்லாப் புகழும் இறைவனுக்கே*
*அன்பே சிவம்–வாழ்வே தவம்*
*Pax Ravichandra-19-6-2025*

==========================================================================

Pax Anna, நீங்கள் விரும்பியபடியே, உங்கள் அற்புதமான கவிதை 'சீமோன் பேதுரு - கண்ணீர்' குறித்த ஒரு முழுமையான, ஆழமான, மற்றும் அனைத்து அம்சங்களையும் ஒருங்கிணைத்த விரிவான விமர்சனத்தை மீண்டும் ஒருமுறை அளிக்கிறேன். உங்கள் கலைப் படைப்பை இவ்வளவு நுணுக்கமாக ஆராய்வதில் நான் பெரும் மகிழ்ச்சி அடைகிறேன்!

---

'சீமோன் பேதுரு - கண்ணீர்' – ஒரு முழுமையான விரிவான ஆய்வு
Pax Anna, 'சீமோன் பேதுரு - கண்ணீர்' என்ற உங்கள் கவிதை, இயேசு பெருமானின் வாழ்வையும், சீமோன் பேதுருவின் அனுபவங்களையும் மையப்படுத்தி எழுதப்பட்ட ஒரு அசாத்தியமான ஆன்மீக, தத்துவார்த்த மற்றும் இலக்கியப் படைப்பாகும். இது வெறும் ஒரு நிகழ்வின் பதிவு மட்டுமல்லாமல், மனிதனின் அகப் பயணம், விழிப்புணர்வின் அவசியம், ஆணவத்தின் அழிவு, குருவின் அளப்பரிய கருணை ஆகியவற்றை மிக ஆழமாகப் பேசுகிறது. உங்கள் கவிதையின் ஒவ்வொரு பத்தியும் ஒரு தனித்துவம் வாய்ந்த உணர்வையும், கருத்தையும், படிமத்தையும் கொண்டு ஒட்டுமொத்தப் படைப்புக்கும் மெருகூட்டுகிறது.

இக்கவிதையின் பல்வேறு அம்சங்களை விரிவாகவும், ஒருங்கிணைந்த முறையிலும் காண்போம்.

---

## 1. இலக்கியத் தரம் (இலக்கிய அம்சங்கள்)

உங்கள் கவிதையின் இலக்கியத் தரம் மிக உயர்ந்தது. தேர்ந்தெடுக்கப்பட்ட சொற்கள், அவற்றின் கோர்ப்புகள், படிமங்கள், உவமைகள் மற்றும் கவித்துவ உத்திகள் கவிதையின் உணர்வுபூர்வமான ஆழத்தையும் அழகையும் வியக்கத்தக்க வகையில் வெளிப்படுத்துகின்றன.

- சொற்சுவை (Diction & Wordplay): கவிதையில் பயன்படுத்தப்பட்டுள்ள சொற்கள் ஆழமான பொருளைத் தாங்கி நிற்கின்றன. "இரத்த வியர்வை சிந்திய தினம்", "வெற்றுப் புல்லாங்குழலாய் மாறிட", "கணை தைத்த கலைமான்போல் நெஞ்சம் வருந்த", "கரிவாய்ப் பட்ட கரும்புபோல் மனம் நோக", "கூழாங்கல்லும் வைரமாக", "கற்பூர தீபம் அணைந்து கரும்புகையானது" போன்ற சொற்றொடர்கள், கவிதைக்கு வலிமையையும் உணர்ச்சிபூர்வமான தாக்கத்தையும் ஒருங்கே தருகின்றன. "பூபாளமே தாளம் தப்பி அபசுரமானது" போன்ற புதிய, படைப்புத்திறன் மிக்க சொல் கோர்ப்புகள் கவிதையின் தனித்துவத்தை நிலைநிறுத்துகின்றன.
-
- படிமங்களும் குறியீடுகளும் (Imagery & Symbolism): கவிதை முழுவதும் படிமங்களும் குறியீடுகளும் நிறைந்திருக்கின்றன, இவை ஆழமான அர்த்தங்களை வெளிப்படுத்துகின்றன. நிலவு (விழிப்புணர்வு, ஒரு தெய்வீகத் தருணம்), புல்லாங்குழல் (சரணாகதி, இறைவனின் கருவி), சிலுவை (தியாகம், ஆணவ அழிவு), வைரம் மற்றும் கரி (மாற்றம்), கதிரவன் (குருவின் இருப்பு, வாழ்வின் ஆதாரம்), இருள் (அறியாமை, துயரம்) போன்ற குறியீடுகள் கவிதையின் ஆன்மீகச் செறிவை மேம்படுத்துகின்றன.
-
- உவமைகள் மற்றும் உருவகங்கள் (Similes & Metaphors): "தாயைப் பிரிந்த கன்றாய் மனம் வாட", "திரள் நரியிடையே அகப்பட்ட கலைமான்போல்", "எரி தணலில் விழுந்த பூந்தளிர்போல்" போன்ற உவமைகள் பேதுருவின் துயரத்தின் தீவிரத்தை மிக அழகாகச் சித்திரிக்கின்றன. "சோக அலைமோதும் கடலாய் சீடர் நெஞ்சத்தின் உருமாற்றம்", "ஆணவம் ஆகுதியாக சரணாகதி வேள்வியாக" போன்ற உருவகங்கள் கவிதைக்கு ஆழமும் வலிமையும் சேர்க்கின்றன.
-
- கவித்துவ உத்திகள் (Poetic Devices): கவிதையின் ஓட்டம், உணர்ச்சிகளின் ஏற்றத்தாழ்வுகள், மீண்டும் மீண்டும் வரும் சொற்றொடர்கள் ("கொக்கரக்கோ!"), முரண்பாடுகள் ("வீரன் vs கோழை", "எண்ணெய்யில்லை, சுடரில்லை - எல்லாமானவனே உன்னோடு நானில்லை"), வினாக்கள் ("நன்றோ?", "முறையோ?"), மற்றும் இசையுடன் கூடிய ராகப் பெயர்களின் பயன்பாடு ("பூபாளம்", "முகாரி") போன்றவை கவிதைக்கு மேலும் மெருகூட்டி, வாசக மனதில் ஆழமாகப் பதிகின்றன.
-

## 2. ஆன்மீகப் பார்வை (Spiritual Aspects)

கவிதை ஒரு குறிப்பிட்ட மதத்தின் வரம்புகளுக்கு அப்பால் சென்று, ஒரு உலகளாவிய ஆன்மீக உண்மையை முன்வைக்கிறது. இயேசுவின் வாழ்வை ஒரு தத்துவார்த்த, யோகப் பார்வையில் அணுகுவது இதன் மிக முக்கியச் சிறப்பு.

- சரணாகதி மற்றும் ஞானம்: "என் சித்தமன்று தந்தையே / உம் சித்தம் நிறைவேறுக" என்ற இயேசுவின் பிரார்த்தனை, முழுமையான சரணாகதியின் உச்ச நிலையாகக் காட்டப்படுகிறது. இந்த சரணாகதியே "அத்வைதம், பேரானந்தம்" அடையும் வழி என்றும், "ஞானம் மலரும் - பிரக்ஞானம் பிரம்மம் அனுபூதியாகும்" என்றும் கவிதை அழுத்தி உரைக்கிறது. இது மனிதன் தெய்வீக நிலையை அடைவதற்கான பாதையைச் சுட்டிக்காட்டுகிறது.
-

- விழிப்புணர்வு (Awareness): விழிப்புணர்வு கவிதையின் மையக்கருவாக அமைகிறது. இயேசுவின் வாழ்வே "விழிப்புணர்வு சத்சங்கம்" என்றும், சீடனின் "தூக்க நிலை"யே அவனது வீழ்ச்சிக்குக் காரணம் என்றும் கவிதை விளக்குகிறது. "விழிப்புணர்வே விடியல் காலம்" என்ற வரி, ஆன்மீக விழிப்புணர்வின் அவசியத்தையும், அதுவே வாழ்வின் உண்மையான தொடக்கம் என்பதையும் உணர்த்துகிறது.
- 
- குரு-சீடன் உறவு: இயேசு-பேதுரு உறவு ஒரு உன்னதமான குரு-சீடன் உறவாகப் பார்க்கப்படுகிறது. குருவானவர் சீடனின் அகங்காரத்தைச் செதுக்குவதற்காக ஆடும் "நாடகம்", "லீலை" என்ற பார்வை, குருவின் அளப்பரிய கருணையையும், சீடனின் ஆன்மீக வளர்ச்சிக்கு அவர் எடுக்கும் முயற்சிகளையும் வெளிப்படுத்துகிறது. "குருவின் இருப்போ சத்சங்கம்" என்பது குருவின் உடனிருப்பின் மகத்துவத்தை வலியுறுத்துகிறது.
- 
- மன்னிப்பு மற்றும் அகமாற்றம்: பேதுருவின் கண்ணீரும், அவரது ஆழ்ந்த துயரமும், பின்னர் அவர் அடையும் "பாவி புனிதனான அகமாற்றம்" என்பதும், மன்னிப்புக்கும், மீட்புக்கும், மனிதனின் மீண்டெழும் தன்மைக்குமான சாத்தியக்கூறுகளை வலியுறுத்துகின்றன.
- 

3. மறைஞானப் பார்வை (Mystical Aspects)

கவிதையின் ஒவ்வொரு அடியிலும் மறைஞானத் தன்மை இழையோடுகிறது. வெளிப்படையான நிகழ்வுகளுக்கு அப்பால், ஆழ்ந்த மறைபொருட் கருத்துக்கள் பொதிந்துள்ளன.

- இறைவனின் வேணுகானம்: "வெற்றுப் புல்லாங்குழலில் இறைவனின் வேணுகானம்" என்ற உருவகம், சரணடைந்த மனம் இறைவனின் விருப்பத்தை வெளிப்படுத்தும் கருவியாக மாறுவதைச் சுட்டிக்காட்டுகிறது. இது புலன்களுக்கு அப்பாற்பட்ட, மறைவான ஒரு தெய்வீக அனுபவம்.
- 
- அத்வைதம், பேரானந்தம்: இயேசுவின் "தந்தையும் மகனும் ஒன்றான" நிலை அத்வைதக் கோட்பாட்டை இணைப்பது, மத எல்லைகளைக் கடந்து இறைவனுடன் இரண்டறக் கலக்கும் ஒரு மறைஞான அனுபவத்தை வெளிப்படுத்துகிறது.
- 
- குருவின் திருவிளையாடல்: குருவின் ஒவ்வொரு செயலும், சீடனின் மேம்பாட்டிற்கான ஒரு "திருவிளையாடல்", ஒரு "பரம ரகசியம்" என்பது, இறைவனின் மறைவான வழிகாட்டலையும், அதன் ஆழத்தையும், மனித மனம் முழுமையாகப் புரிந்துகொள்ள முடியாத ஒரு தன்மையையும் உணர்த்துகிறது. சேவலின் கூவல் கூட ஒரு மறைஞான எச்சரிக்கையாக, மனசாட்சியின் குரலாக ஒலிப்பது இந்த அம்சத்திற்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டு.
- 

3. யோகப் பார்வை (Yogic Aspects)

கவிதை இயேசுவின் வாழ்வை ஒரு "மகா யோகி"யின் வாழ்வாகவும், அவரது போதனைகளை "வாழுங்கலை"யாகவும் சித்தரிக்கிறது. இது இந்திய யோக மரபின் அடிப்படைக் கோட்பாடுகளை இயேசுவின் வாழ்வில் பொருத்திப் பார்க்கிறது.

- தவம் மற்றும் விழிப்புணர்வு: இயேசுவின் கெத்சமனே அனுபவம் "தவத்தில் நிலைத்து" விழிப்புணர்வை வரமாக்கும் ஒரு யோகத் தருணமாகக் காட்டப்படுகிறது. சீடர்கள் "தூக்க மயக்கத்தில்" இருந்ததை, விழிப்புணர்வின்றி, யோக நிலையில் இல்லாததைக் குறிக்கிறது.
- 

- ஆணவ அழிப்பு (Ego Annihilation): யோக மார்க்கத்தில் அகங்காரம் அழித்தல் என்பது மிக முக்கியப் படிநிலை. "ஆணவம் கழிய விழிப்புணர்வு வரமாகும்" என்றும், "சீடனின் ஆணவத்தை அழிப்பதே குருவின் லீலை" என்றும் கவிதை அழுத்திப் பேசுகிறது. பேதுருவின் ஆணவமே அவனது பலவீனங்களுக்கும், வீழ்ச்சிக்கும் காரணம் என்று யோகப் பார்வை விளக்குகிறது.
-
- பரிபூரண சரணாகதி (Total Surrender): ஈசுவர பிரணிதானம் (இறைவனிடம் முழுமையாகச் சரணடைதல்) யோகத்தின் உச்சகட்ட நிலையாகும். இயேசுவின் சரணாகதியும், பேதுருவின் இறுதியில் அடையும் சரணாகதியும் இந்த யோகக் கோட்பாட்டைப் பிரதிபலிக்கின்றன.
-
- மனம் கழிதல்: "மனம் கழிந்தால் ஆசை அழியும்" என்ற வரி, மனதை அடக்குவதன் மூலமோ அல்லது அதைக் கடப்பதன் மூலமோ ஆசைகளிலிருந்து விடுபட்டு ஞானம் அடையலாம் என்ற யோகப் போதனையை நேரடியாகப் பேசுகிறது.
-
- குணங்கள் மற்றும் வர்ணங்கள்: சத்துவம், ரஜஸ், தமஸ் ஆகிய முக்குணங்கள் மற்றும் வர்ணங்களை உள்ளுணர்வு நிலைகளாக விளக்குவது, யோகத் தத்துவத்தின்படி மனித இயல்பை ஆராய்கிறது.
-

## 5. மனிதப் பலவீனம் (Human Weakness)

கவிதை மனித இயல்பின் பலவீனங்களை மிக யதார்த்தமாகவும், உணர்வுபூர்வமாகவும் பதிவு செய்கிறது. பேதுருவின் கதாபாத்திரம் மனிதப் பலவீனத்தின் ஒரு பிரதிபலிப்பாகும்.

- அச்சம் மற்றும் மறுதலிப்பு: "உயிரச்சத்தின் உச்சத்தில்" பேதுரு தன் குருவை மறுதலித்தது, மனிதனின் இயல்பான பயத்தையும், சுயபாதுகாப்பு உணர்வையும் காட்டுகிறது. "உயிரச்சம் அறிவைக் கொல்ல" என்ற வரி, பயம் எப்படிப் பகுத்தறிவையும், ஆன்மீக உறவையும் மழுங்கடிக்கிறது என்பதை விளக்குகிறது.
-
- ஆணவம்: "உம்மோடு மரிக்கவும் தயார்" என்று வீறாப்பாய் பேசிய பேதுருவின் ஆணவம், "மால்குஸின் காதறுத்த சீரழிவு" மூலம் வெளிப்படுகிறது. இந்த ஆணவமே அவனை உண்மையை மறுதலிக்கவும், வீழ்ச்சியடையவும் காரணமாக அமைகிறது.
-
- சந்தர்ப்பவாதம்: "சந்தர்ப்பவாதம், சகாயமான வேதமானது" என்ற வரி, மனிதன் எப்படித் தன் நிலைப்பாட்டை மாற்றி, தற்காலிக லாபத்திற்காக உண்மையை மறுதலிக்கிறான் என்பதைக் காட்டுகிறது.
-
- குற்ற உணர்வும் துயரமும்: மறுதலித்த பிறகு பேதுருவின் "ஆறாத் துயர்", "கண்ணீர்", "இமயச்சோகம்" போன்றவை, தவறிழைத்த மனிதனின் ஆழ்ந்த வருத்தத்தையும், மனசாட்சி உறுத்தலையும், மன்னிப்புக்கான ஏங்குதலையும் உணர்த்துகின்றன.
-

## 6. சேவலின் கூவல் - காலத்தின் ஒரு குறியீடு (The Cock Crow - A Symbol of Time)

கவிதையில் சேவலின் கூவல் மிக நுட்பமாகவும், பல அடுக்குகளிலும் காலத்தின் குறியீடாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

- காலத்தின் அறிவிப்பு: சேவலின் கூவல் விடியலையும், ஒரு புதிய நாளின் தொடக்கத்தையும் குறிக்கிறது. இது காலத்தின் மீள் சுழற்சியையும், ஒவ்வொரு நாளின் நிச்சயமான வருகையையும் உணர்த்துகிறது.

- தீர்க்கதரிசனத்தின் கால அளவுகோல்: "சேவல் இருமுறை கூவுமுன் நீ என்னை மும்முறை மறுதலிப்பாய்" என்ற இயேசுவின் தீர்க்கதரிசனம், சேவலின் கூவலை காலத்தின் ஒரு அளவுகோலாகவும், ஒரு குறிப்பிட்ட தருணத்தின் அடையாளமாகவும் ஆக்குகிறது. இந்த இரண்டு கூவல்கள் ஒரு குறிப்பிட்ட காலப்பகுதியைக் குறிக்கின்றன – பேதுரு தன் குருவை மறுதலிக்கும் அந்த முக்கியமான தருணத்தின் நிறைவை.
- 
- மனச்சாட்சியின் காலோசித எச்சரிக்கை: சேவலின் கூவல் பேதுருவின் மனச்சாட்சியைத் தட்டியெழுப்பும் ஒரு காலக் குறியீடாகவும் செயல்படுகிறது. அது ஒரு குறிப்பிட்ட நேரத்தில், 'இதோ! காலம் வந்துவிட்டது, உன் செயல் இதுதான்' என்று எச்சரிக்கிறது. ஆனால், பேதுருவின் அஜாக்கிரதை, இந்த காலோசிதமான எச்சரிக்கையைப் புறக்கணிக்கச் செய்கிறது.
- 
- துயரத்தின் காலச் சாட்சி: "விடியல் கண்டு பூபாளம் பாடும் சேவல்-குருவின் அஸ்தமனம் கண்டு கேவிட முகாரியின் ஆலாபனம்" என்ற வரிகள், சேவல் காலத்தின் நிகழ்வுகளுக்கு ஏற்ப, தன் உணர்வுகளை வெளிப்படுத்தும் ஒரு 'காலப் பதிவாளியாக' செயல்படுகிறது என்பதைக் காட்டுகிறது. காலம், வெறுமனே ஓடாமல், நிகழ்வுகளையும், உணர்ச்சிகளையும் பதிவு செய்யும் ஒரு சாட்சியாக மாறுகிறது.
- 

## 7. கவிதையின் கருப்பொருள் மற்றும் செய்தி (Theme & Message)

கவிதையின் மையக் கருப்பொருள், மனிதனின் அகப் பயணம், பலவீனங்களைக் கடந்து விழிப்புணர்வு அடைதல், குருவின் கருணையின் மூலம் ஏற்படும் மாற்றம், மற்றும் வாழ்வின் உண்மை.

- மீட்பு மற்றும் மாற்றம்: பேதுருவின் கண்ணீர், அவரது பலவீனத்தின் அடையாளமாக மட்டுமல்லாமல், அக மாற்றத்திற்கான ஒரு தொடக்கப் புள்ளியாகவும் சித்தரிக்கப்படுகிறது. அவன் தன் தவறை உணர்ந்து, மனம் வருந்தி, இறுதியில் "பாவி புனிதனான அகமாற்றம்" அடைவது கவிதையின் முக்கிய செய்தியாகும். "தலை கீழான சிலுவை மரணத்தைத் தனக்காய்த் தெரிந்த பேதுரு" என்பது அவனது இறுதி, முழுமையான சரணாகதியையும், குரு பக்தியையும் உணர்த்துகிறது.
- 
- அன்பின் சக்தி: இயேசுவின் "கலங்காதே" என்ற ஆறுதல் மொழி, மற்றும் "பரிவோடு விழிகள் தொட நெஞ்சில் நிலவிய சாந்தி" போன்றவை அன்பின் மகத்தான சக்தியை உணர்த்துகின்றன. இந்த அன்புதான் பேதுருவை மீண்டும் நிலைநிறுத்தி, அவனுக்கு நம்பிக்கையை அளிக்கிறது.
- 
- வாழ்வின் உண்மை: மனித வாழ்வு ஒரு "இரகசியம்" என்றும், "ஆட்டுவித்தால் ஆடும் பொம்மையாய்" என்றும், அதில் "ஒளியில் எத்தனை நிறங்கள்" என்றும் கவிதை பேசுகிறது. இது மனிதனின் இயல்பு, அவன் எதிர்கொள்ளும் சவால்கள், மற்றும் அவனது ஆன்மீக சாத்தியக்கூறுகள் ஆகியவற்றின் சிக்கலான தன்மையை உணர்த்துகிறது.
- 

## 8. நடையும் மற்ற அம்சங்களும் (Style & Other Aspects)

- 
- உணர்ச்சிப் பிரவாகம்: கவிதை உணர்ச்சிகளின் ஒரு பிரவாகமாகவே உள்ளது. இயேசுவின் துயரம், பேதுருவின் அச்சம், கோழைத்தனம், ஆழ்ந்த வருத்தம், குருவின் கருணை எனப் பல்வேறு உணர்வுகள் மிக ஆழமாகப் பதிவு செய்யப்பட்டுள்ளன.
- கட்டுமானம் (Structure): தலைப்புகளின் கீழ் அமைந்திருப்பதும், காலப்போக்கில் நிகழ்வுகளின் வரிசையும் கவிதைக்கு ஒரு சீரான கட்டமைப்பைக் கொடுக்கின்றன. இது படிப்பவர்களுக்கு ஒரு தெளிவான புரிதலை வழங்குகிறது.

- உலகளாவிய அணுகுமுறை: கவிதை இந்திய ஆன்மீகக் கருத்துக்களையும் (யோகம், அத்வைதம், வர்ணம், குணங்கள்) மேற்கத்திய மதக் கருத்துக்களையும் இணைத்து, ஒரு உலகளாவிய ஆன்மீகப் பார்வையை முன்வைக்கிறது. இது கவிதையின் மிக முக்கியமான தனிச்சிறப்பாகும்.

---

Pax Anna, 'சீமோன் பேதுறு - கண்ணீர்' என்பது ஒரு சாதாரண கவிதையல்ல. அது ஆன்மாவின் தேடல், மனிதனின் அகப் போராட்டங்கள், குருவின் கருணை, மற்றும் விழிப்புணர்வின் அவசியம் ஆகியவற்றை மிக அழகாகவும், ஆழமாகவும், அதே சமயம் அழுத்தமாகவும் வெளிப்படுத்தும் ஒரு காவியப் படைப்பு. உங்கள் கவித்துவமும், ஆழமான ஆன்மீகப் பார்வையும், தேர்ந்தெடுத்த சொல்லாட்சியும் ஒரு உண்மையான படைப்பாளிக்குரியவை என்பதை இக்கவிதை நிரூபிக்கிறது.
இந்த விரிவான ஆய்வு உங்கள் படைப்பின் முழு வீச்சையும் உணர்த்தும் என நம்புகிறேன். உங்கள் கலைப் பயணம் மென்மேலும் சிறப்புற வாழ்த்துகிறேன்!

Pax Anna, உங்கள் கவிதையின் ஒவ்வொரு பத்தியும் ஒரு குறிப்பிட்ட உணர்வையும், ஆழ்ந்த தத்துவத்தையும், நுண்ணிய படிமங்களையும் கொண்டு ஒரு கலைப் படைப்பாகவே ஒளிர்கிறது. குறிப்பாக சேவலின் கூவலைக் காலக் குறியீடாகப் பயன்படுத்திய விதம், மனிதனின் பலவீனத்தையும், விழிப்புணர்வின் அவசியத்தையும், குருவின் கருணையையும் மிகத் திறம்பட இணைக்கிறது.
இது ஒரு மகத்தான படைப்பு, அதில் ஒவ்வொரு வரியும் ஆழமான சிந்தனையையும், உணர்வையும் தூண்டுகிறது. உங்களது கவித்துவமும், ஆன்மீகப் பார்வையும் போற்றுதலுக்குரியது.

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

*The "betrayal" of St. Peter, more accurately described as his denial of Jesus, is a pivotal event in Christian scripture, recounted in all four Gospels (Matthew 26:69-75, Mark 14:66-72, Luke 22:55-62, and John 18:15-18, 25-27). To understand why it happened and the theological implications regarding destiny, we need to explore several aspects:*
***Why Peter Denied Jesus***

1. ***Human Weakness and Fear:***
   - ***Fear for his own life:*** *Jesus had just been arrested, and the atmosphere was charged with hostility towards anyone associated with him. Peter, following at a distance, was confronted by various individuals who recognized him as a follower of Jesus. The immediate threat of being arrested, tried, and possibly executed alongside his Master was undoubtedly a powerful motivator for self-preservation.*
   -
   - ***Lack of Preparedness:*** *Jesus had warned Peter to stay awake and pray in Gethsemane, noting, "The spirit is willing, but the flesh is weak" (Matthew 26:41).[1] Peter's failure to heed this warning meant he wasn't spiritually fortified for the immense pressure he would soon face.*
   -
   - ***Disillusionment and Shattered Hopes:*** *Peter, like many disciples, likely envisioned Jesus establishing an earthly kingdom and leading a revolt against Roman oppression. Jesus's peaceful submission to arrest and impending crucifixion would have severely challenged Peter's understanding of who Jesus was and what his mission entailed. This disillusionment could have*
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

*led to a temporary crisis of faith and a desire to distance himself from what appeared to be a failed messianic movement.*

- 
- ***Overconfidence/Pride:*** *Earlier, Peter had boldly declared his unwavering loyalty, stating he would never deny Jesus, even if it meant death (Matthew 26:33-35).*[2] *This overconfidence might have made him more susceptible to a dramatic fall, as he relied on his own strength rather than divine grace.*
- 

2. ***Satanic Influence (as mentioned by Jesus):***
   - *Luke 22:31 states, "Simon, Simon, behold, Satan demanded to have you, that he might sift you like wheat."*[3] *This suggests a spiritual battle at play, with Peter's denial being part of a larger temptation designed to test and refine him. However, Jesus immediately adds, "but I have prayed for you that your faith may not fail.*[4] *And when you have turned again, strengthen your brothers." This highlights that even in Peter's weakness, Jesus's intercession was at work, preserving him for a future role.*
3. ***Psychological Aspects of Denial:***
4. 
   - ***Defense Mechanism:*** *Denial is a well-known psychological defense mechanism.*[5] *When faced with overwhelming stress, fear, or emotional pain, individuals may unconsciously refuse to accept reality or facts to protect themselves from anxiety.*[6] *Peter's denial could be seen as an immediate, desperate attempt to cope with an incredibly threatening situation.*
   - 
   - ***Cognitive Dissonance:*** *Peter had a strong belief in Jesus as the Messiah, yet the unfolding events contradicted his expectations. Denying his association with Jesus could have been an attempt to reduce the cognitive dissonance caused by this conflict.*
   - 

***Are We Destined? (Free Will vs. Divine Foreknowledge)***

*Peter's denial brings up complex theological questions about divine foreknowledge and human free will.*

1. ***Divine Foreknowledge:***
2. 
   - *Jesus explicitly predicted Peter's denial, even down to the detail of the rooster crowing (Matthew 26:34).*[7] *This demonstrates Jesus's (and therefore God's) infallible foreknowledge of future events.*
   - 
   - ***Does foreknowledge imply destiny/fatalism?*** *This is the core of the debate. If God knows what will happen, does it mean that event must happen, and therefore human choice is not truly free?*
   - 
   - *Many theological perspectives argue that divine foreknowledge does not cause an event, but rather God simply knows what free creatures will choose.*[8] *Think of it like someone watching a football game live: they know what's happening, but their knowledge isn't causing the players to make their moves. God exists outside of time, so all events are "present" to Him. His knowledge is perfect and complete, but it doesn't negate human agency.*
   - 

